17th February 1959]

*429 *Q.*—Sri M. C. MUTHUKUMARASWAMY : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா, நன்னிலம் தாலுக்கா பேரளத்திலுள்ள லோகல் பண்டு ஆஸ்பத்திரியை அரசாங்கமே எடுத்து நடத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI P. G. MANICKAM : கனம் சபாநாயகர் அவர்களே எனது
3 கேள்விகளையும் நாளைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

MR. SPEAKER : அப்படி எல்லாக் கேள்விகளையும் எடுத்துக் கொள்ளமுடியாது. எதற்கும், 430-வது கேள்வியை நாளை எடுத்துக் கொள்ளலாம்.

*Lands for Harijans*

* 431 *Q.*—SRI S. B. ADITYAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any representation has been received from the Harijans of Chettipunyam, Chingleput taluk for the assignment of lands; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) Necessary action is being taken by the Revenue authorities to assign the lands to the Harijan applicants of the village.

*Tamil Typewriters*

*432 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) ஜில்லாக்களிலுள்ள சர்க்கார் காரியலாயங்களுக்கு எத்தனை தமிழ் டைப்ரைட்டிங் யந்திரங்கள் 1958-ம் வருஷத்தில் வாங்கப்படுவதற்காக ஆர்டர்கள் கொடுக்கப்பட்டன ?

(ஆ) எத்தனை டைப்ரைட்டிங் யந்திரங்கள் சப்ளை செய்யப்பட்டிருக்கின்றன ?

(இ) 1959-ம் வருஷத்தில் எத்தனை தமிழ் டைப்ரைட்டிங் யந்திரங்கள் வாங்கப்படுவதற்காக ஆர்டர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI V. RAMIAH : (அ) & (ஆ) During the financial year 1958–59, orders were placed for 600 Tamil Typewriters with standardised key board, out of which 100 have been supplied so far.

(இ) None, Sir, as it is too early to assess the requirements for 1959–60.

SRI P. G. MANICKAM: பாக்கியுள்ள டைப்ரைட்டிங் மெஷின்கள் எப்பொழுது வாங்கப்படும் என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI V. RAMIAH : : 1958–59-ல் 600-க்கு ஆர்டர் கொடுத்திருக்கிறோம். அதில் 100 வந்துவிட்டது, இன்னும் 500 வரவேண்டும்.